உபயதாரர் (கு) நன்'கொடைமணி"
அவர்கட்கு.

வேலு மயிலுந் துணை.

# திருச்செந்தூர் முருகன்
# தரிசன மாலை.

(முதற் பாகம்)

## தேவாரச் சந்தம்

[முதலிய பாசுரங்கள்]

அருணகிரிநாத சுவாமிகளின் கந்தரனுபூதி, திருப்புகழ், முதலிய பல அரியநூல்களின் உரை ஆசிரியரும், சிவ பராக்கிரம வசன நூலாசிரியரும், ஸ்ரீ முருகப் பெருமான் மீது பற்பலவிதங்களான பாடல்கள் பாடித் தமிழ்ப் பணியாற்றி வருபவரும் ஆஸ்திகமதசித்தாந்தஅவதானியுமாகிய

திருச்சுழியல், வித்வான்

## மு. வீரவேற் பிள்ளையவர்கள்

இயற்றியது

இராமநாதபுரம் ஜில்லா, முதுகுளத்தூர், சித்திரங்குடியில் வசிக்கும் மணிலெண்டர் லாண்டுலார்டும், பிரபல வர்த்தகரும், செந்திலாதிபனிடம் பரம்பரை பக்த சிகாமணியுமாகிய

**அன்பர் திரு. கணபதி செட்டியாரவர்கள்**

அளித்த பொருளுதவி கொண்டு

திருச்சி, குமரன் அச்சகத்தில் பதிப்பிக்கப்பெற்றது.

பதிப்புரிமை பெற்றது]      1950      [விலை அணா 6.

# நூன்முகம்.

## கந்த ரந்தாதி

தேங்கா வனமும் மதகரி வேந்துடன் சேர்ந்த விண்ணோர்
தேங்கா வனமுனை யவ்வேற் பணியெனுஞ் சேயிட மேல்
தேங்கா வனமுந் தளர்நடை யாயஞ்சல் செண்பகப் பூந்
தேங்கா வனமுங் கமுநீ ரிலஞ்சியுஞ் செந்திலு மே."

— அருணகிரியார்.

பூம்பொழில் சூழும் திருச்செந்தூர், புராதனவளம்பதி. அங்குச் சென்று பக்த கோடிகள் முருகப்பெருமானை உண்மைத் தெய்வமெனக் கொண்டாடி உள்ளம் உவந்து வழிபாடு புரிகின்றனர் என்பது வெள்ளிடைமலை. அவன் கோயில் கொண்டருளிய ஆறாதார தலங்களில் திருச்செந்தூர் பிரசித்திவாய்ந்தது. செயந்திபுரம், திருச்சீரலைவாய், சந்தனாசலம், செந்திலம்பதி, என்பதும் இத்தலத்தின் பரியாயநாமங்களாகும்.

சூரபன்மனாதியரால் அல்லலுற்ற அமரர்கட்கு அபயமளித்ததும், வீரவாகுதேவரை, சூரபன்மனிடம் தூது அனுப்பியதும், பின்பு பூதசேனாவீரர்கள் சூழக் கடல்கடந்து சென்று சூரசங்காரம் புரிந்து அமரர் சிறைமீட்டித் திரும்பி வந்து கோயில் கொண்டருளியதும், துன்பம் நீங்கி இன்பம் அடைந்த பிரமேந்திராதிகளாகிய தேவர்கள் பேருவகை கொண்டு பண்புடன் செய்த பூசனையை அன்புடன் ஏற்றருளியதும், வீரவாகுதேவருக்கு விஸ்வரூப தெரிசனங் காட்டியதும், தேவகுஞ்சரி சிவலிங்க பூசைசெய்து சித்தியடைந்ததும், பிரமதேவருக்கு வரமளித்ததும் வள்ளியம்மையின் திருமணக்கோலமும், இத்தலத்தில் நிகழ்ந்த முக்கிய திருவிளையாடல்களாகும்.

இக்கலியுகத்திலுங்கூட அருட்புலமை வாய்ந்த அடியார்களாகிய நக்கீரர், அருணகிரிநாதர் முதலியவர்களின பாடல்களை ஏற்றருளியதும், ஐந்துவயதுவரை ஊமையாயிருந்த குமரகுருபரரை ஆட்கொண்டு கந்தர்கலிவெண்பா பாடுகவென்றருள் புரிந்ததும், பகழிக்கூத்தர் என்னும் ஓர் மெய்யன்பர், பிள்ளைத்தமிழாகிய பிரபந்தம்பாடி வெகுகாலமாகத் தம்மைப் பீடித்திருந்த குன்மநோய் நீங்கப்பெற்றதும், கல்விஞானமே சற்றுமில்லாத ஆலய மடப்பள்ளிச்சுயம்பாகி வென்றிமாலை ஐயனைத்தடுத்தாட்கொண்டு தலப்புராணம் பாடும்படி கலாவிநோதம் புரிந்ததும், செந்திலாதிபன் திருவிளையாடல்களேயாம். சன்மார்க்க முறைகொண்டு திரிகரண சுத்தியுடன் தம்மைச் சரணடைந்து துதிக்கும் பக்தர்கட்கு அவரவர் அன்பிற்கிசைந்தவாறு கருணைக்கடலாகிய கந்தப்பெருமான் அநுக்ரகம் புரிகின்றாரென்பது இற்றைக்கும் அத்தலத்தில் பிரத்யட்சப் பிரமாணமாய் நிகழ்ந்து வரும் அற்புத லீலைகளாகும்.

ஐஸ்வரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம், என்னும் அறுகுணங்களே ஆறுமுகங்களாகவும், பிரணவமே மயில்வாகன பீடமாகவும், இச்சை, கிரியை, ஞானம் என்னும் முச்சக்திகளே வள்ளி, தெய்வயானை, வேலாயுதமாகவும் கொண்டு விளங்குகின்ற செந்திற்கடவுளின் திருவருட்செல்வம் படைத்த திரிசுதந்திரரென்னும் ஈராயிரம் அந்தணமுனிவர் மரபிற்றோன்றிய பிரமணியங்களாகிய அர்ச்சகர்கள் ஆண்டவனுக்குப் பரம்பரையாக மிகவும் பக்தி விநயமுடன் ஆசார அபிஷேக பூசார வுபசார நிவேதனர்ச்சனைகள் புரிந்து பக்தகோடிகட்கு இனிது முகமலர்ந்து உவகையுடன் இலை, விபூதி முதலிய பிரசாதமளித்துவரும் இப்பெருமை இத்தலத்தின் தெய்வசாநித்யத்தையே மென்மேலும் விளங்கச் செய்வதாகும்.

இப்புண்ணிய சேத்திரத்தில் இருபத்துநான்கு தீர்த்தக்கட்டங்களிருக்கின்றன. அவற்றுள் சந்நிதி முன்னுள்ள

கடலின் முகாரம்ப தீர்த்தமும், கரையிலுள்ள கந்தபுட்கரணியும் (நாழிக்கிணறு) பிரதானமாகும். இத்தீர்த்தங்களில் பக்தகோடிகள் நியமமுடன் நீராடிச் செந்திற்கடவுளைச் சேவித்து இஷ்டபூர்த்திகளையடைவது தற்கால அனுபவமாகும்

செந்திலம்பதியின் இயற்கைவளம் அற்புதமானது. இங்குச்சந்தனுசலமாகிய பறம்பின் மீது அருள்வாரிதியாம் ஆண்டவன் ஆலயம் அமைந்துளது. பெருவாரிதியாம் சமுத்திரம் மலை மலையாய் விண்ணளாவுந் திரையெழும்பி ஓங்காரத்வனி முழங்க நீண்ட அலைகளாகிய கரங்களைப் பரப்பிச் சரவணபவன் சரணாரவிந்தங்களைத் தழுவுவன போன்று சந்தனுசலக் கோயிலின் வாயிலை நோக்கி வந்து பொருந்துவது அதிசயக் காட்சியாகும் "திருச்சீரலைவாய்" என்னும் பெயர் இக்காரணம்பற்றி வந்ததுபோலும். இதன் வடபுறம் கடலோரமாய் இயல்பாக அமைந்துள்ள சந்தனுசலக்குகையானது குறமங்கையாகிய வள்ளிநாயகியின் ஏகாந்த ரகசிய நிலையை யுணர்த்துகிறது.

இன்னும் ஆலய முன்புறமெங்கும் வியாபித்து கண்களுக்கெட்டாத தூரம்வரை வானவெளியுடனொன்றித் தோன்றிக்காட்சியளிக்குங்கடல், அதனிடமிருந்து வரும் வசந்த மாருதம், விசாலமான மணல் வெளி, அங்கங்கு அழகுற விளங்கும் வெள்ளிய மணற்குன்றுகள், தெள்ளிய நீரோடைகள், கற்பகத்தருவனைய தண்டலைகள், வண்டல் வளஞ்சிறந்த செஞ்சலிப்பழன முதலிய யாவும் ஒருங்கே பொலிவுற்று விளங்குவது செந்திலம்பதியின் செழியவளத்தையும் இயற்கையினது சீரிய வனப்பையும் மென்மேலும் பெருக்குவதாகும். இதன் காரணம் பற்றியே அன்புச் செல்வன் அருணகிரியார்.

செழிக்குஞ்சாலியு மேகமளாவிய கருப்பஞ்சோலையும் வாழையு
மேதிகழ் திருச்சேந் தூர்தனில் மேவியதேவர்கள் பெருமாளே.

என்னும் மதுரப்பாடலை வழங்கினார் போலும்.

இவ்வித பெருமை வாய்ந்த இத்தலத்திற்கு மூன்று முறையாக அடியேன் சென்ற விய வருடம் பங்குனி மாதம் இறுதியில் (2—4—46) யாத்திரை சென்று அங்கு மூன்று தினம் வரை தங்கியிருந்து ஆறுமுகப்பெருமானைத் தெரிசனஞ் செய்ததின் ஞாபகார்த்தமாக இச்சிறிய நூலை வெளியிட்டேன்.

"மண்ணும் வேந்தர்களும் அவர்தனமும் மாண்டது நுண்மணலை யொக்கும்" எனவும் "ஒருபொழுதும் வாழ்வதறியார் கருதுபவ கோடியுமல்ல பல" எனவும உண்மை நிலையை யுணர்த்துகின்ற ஞானப் பெரியார் பொன்மொழிக்கிணங்க இவ்வுலக வாழ்வு கானல்நீர் போன்ற மாயாதோற்றம் எனினும், இருவினைப்பயன் காரணமாகத் தோன்றிப் பிரபஞ்ச நாடகத்தில் நடிக்கு மியல்புள்ள அடியேனது மனம் நன்னிலை யடைவதற்கு பரமதயாநிதியாகிய சண்முக முருகன் சரணகமலங்களையே தஞ்சமடைந்து அவன்றிருவருட்டுணை கொண்டு அவன் புகழையே பாடுபணியெய்தி இதுகாறும் வெளியிட்ட பக்தி நூல்கள் பலவாகும். குறிப்பிட்ட நூல்கள் பிரஹ்ம ஸ்ரீ பகவன் ரமணமகரிஷிகள், மகாத்மா காந்தியடிகள், குருபீடபரம்பரையாதீன கர்த்தர்கள், அங்கங்குள்ள ஆன்றோர்கள் இன்பத்தமிழ்ச் சுவைபருகும் பக்திசிகாமணிகள், முதலிய பற்பல பெரியார்கட்கு விநியோகம் செய்யும் சேவைபுரிந்து வருகிறேனென்பது என்னையும் எனது நூல்களையும் நன்கு தெரிந்தவர் அறிவர் ஆதலின் அவனருளாலே அவன்றாள் வணங்குதலாகும் பக்தி சாதனமாகிய எனது தமிழ்ப்பணியை அன்பர்கள் ஆதரிப்பார்களாக. இந்நூலை ஆர்வமுடனேற்று நன்கு பார்வையிட்டு முகவுரை சிறப்புப்பாயிர முதலியன வளித்த பெரியார்கட்கும் பக்திவிநயமுடன் என்றென்றும் நன்றி செலுத்துங்கடமையுள்ளவனு மாவேன்.

அன்பன்,

**மு. வீரவேல்.**

உ

முருகன் துணை.

# தமிழ் தழைக

## முன்னுரை.

எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.

திருவள்ளுவர்.

முருகன் தமிழ்த் தெய்வம். அவர் சிவ பாலன். தமிழர்கள் நீண்டகாலமாக முருகவேளை வழிபடுகிறார்கள். முருகு என்னும் பதம் அழகு, இளமை, இனிமை, வாசனை, என்பனவாய பொருளையுணர்த்துவதாகும். மெய் யன்பர்கள் அப்பெருமானை அழகு வாய்ந்த குழந்தையாகக் கண்டார்கள். வேற்படை தாங்கிய வீரனைக் கண்டார்கள். இடர்களை நீக்கி இன்பந்தரும் இறைவனைக் கண்டார்கள். ஆறுதலளிக்கும் ஆறுமுகனைக் கண்டார்கள். ஆறுபடை வீடுகளில் வழிபட்டு அவன் அருளைப் பெற்றார்கள். அந்த ஆறுபடைவீடுகளில் ஒன்று திருச்சேந்தூர் முருகன் தமிழ்ப்பணி புரிவதையே தம் கடமை யெனக்கொண்டுள்ள இந்நூலாசிரியர் அன்பர் வீரவேற்பிள்ளையவர்கள் ஒரு அருட்கவி. தெய்வசிகாமணியாம் செந்திலாதி பன்மீது தெரிசனமாலை யென்னும் நான்கு பகுதிகளடங்கிய பாமாலை யில் இந்நூலும் ஒன்றாகும். முருகவேளின் திருவருட் பிர சாதத்தால் இதுகாறும் 37 நூல்கள் வரை இயற்றியுள்ளார் கள். ஆண்டிலும், அறிவிலும், அனுபவத்திலுமுதிர்ந்த

வர்கள். தாம் இன்புறுவது போல் உலகமும் இன்புற வேண்டுமென்ற ஒரே கருத்துடன் முருகன் தமிழ்ப்பணி யாற்றி வருகின்றார்கள்.

["எவருக்குப் பகவானிடம் பக்தி உள்ளதோ. அவர்களே மேன்மையானவர்கள். அது ஒன்றே இவ்வுலகில் உண்மையானது, உண்மையான பக்திக்கு அபூர்வமான சக்திபுண்டு. அதன் மூலம் ஒரு பக்தன் ஒரு கல்லினின்றுங்கூடத் தெய்வீக சக்தியை எழுப்பலாம்"] என்று சுவாமி பரமானந்தர் அருளியிருக்கிறார். உண்மையான பக்தியின் பயனால் இந்நூல் வெளி வருகிறது. உள்ளன்புடன் வழிபடும் பக்தர்கட்கு இந்நூலிலுள்ள பாக்கள் மிகவும் உதவியாயிருக்கும். தாய்மொழிப்பற்று, கடவுள் பக்தி, இவ்விரண்டும் தழைத்து ஓங்கி வரும் இந்நாளில் இந்நூல் வெளிவருவது வரவேற்கத்தக்கதே. காகிதங் கிடைக்காத தற்காலத்திலுங் கூட பெரு முயற்சி செய்து இந்நூலை வெளிக்கொண்டுவரும் திரு. வீரவேற்பிள்ளையவர்களை மிகவும் பாராட்டுகின்றேன். ஆதலால் அன்பர்கள் இந்நூலைப் பெரிதும் வரவேற்று ஆசிரியரை ஆதரித்து ஊக்கி இன்னும் இம்மாதிரி பல நூல்களியற்ற உதவி செய்வார்களென நம்புகிறேன், இந்நூலாசிரியருக்கு நீண்ட ஆயுளையும் நிறைந்த செல்வத்தையும் ஸ்ரீ முருகப்பெருமான் அருள்புரிவாராக. அனைவருக்கும் முருகன் திருவருள் முன்னின்றுதவுக.

இங்ஙனம்

**க. சண்முகசுந்தரன்,**

போஸ்ட் மாஸ்டர்,

தலைவர்—கோம்பைத் தமிழ் இல்லம்,

மதுரை மாவட்டத் தமிழ்த்தொண்டர்கழகம்,

செயலகம்—கோம்பை.

# சிறப்புப் பாயிரம்.

மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவரும் ஷெ கலாசாலைப் பண்டிதருமாகிய

## திரு. நல்லசிவன் பிள்ளையவர்கள் பாடிய

## நேரிசை வெண்பா.

---

சித்தம் உவந்து தெரிசனப்பேர் மாலையொன்று
அத்தனருள் செந்தூர் அறுமுகன் மேற்—பக்தியுடன்
வீரவேல் நாமன் மிலைந்தான் வியன் புலவோர்
ஆரவே சொன்மலரால் ஆய்ந்து.

---

இராமநாதபுரம், சிவகெங்கை உபயசமஸ்தான வித்துவான் சிலேடைப்புலி, வேம்பத்தூர் பிச்சுவய்யரவர்கள் புத்திரரும், மதுரை A. R. H. ஸ்கூல் தமிழ்ப் பண்டிதருமாகிய

## திரு. பாஸ்கரையரவர்கள்

பாடிய வெண்பா

செந்தில் முருகன் திருவடிக்குச் செய்யுளணி
செந்தமிழ்ச்சங் கத்தார்கள் சித்தமெலாம்—முந்தவே
வீரவேற் பிள்ளை விழைந்தன்பாற் சொற்றனரால்
தாரணியில் வாழ்கநிதந் தான்.

கோவைத் தமிழ்ச்சங்கத் தலைவரும், சைவப்பிரசங்கசாலை
அதிபரும், நீதி மன்றத்தின் வழக்கறிஞருமாகிய,
சேக்கிழார் நிலையம்
சிவக்கவி மணி

**திரு C. K. சுப்பிரமணிய முதலியார் B. A. அவர்கள்**

பாடிய அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியம்

கருச்சுழியி லாழாம வெமையாளும் வேற்றடக்கைக்
கந்த வேண் மேல்

வரப்பிரசா தம்பெருகும் பாமாலை முதற்பலவும்
வகையாய்ச் செய்தான்

அருட்சிறப்பி னணிபெருக வவனியுளோர் சார்ந்துய்யு
மழகார் செய்ய

திருச்சுழீய வியற்கவியாம் வீரவேற் பிள்ளை யெனுஞ்
செம்மை யோனே.

---

கோவை R. S. புரத்திலிருக்கும், தாராபுரம், தமிழகம்

**வித்வான் திரு. நா. ஆறுமுகம் பிள்ளையவர்கள் பாடிய**

எழுசீர்கழி நெடிலடி ஆசிரியம்

வீரவே லேந்துங் குருபா னடிக்கே மெய்ம்மையாம்
அன்புள மனத்தோன்

பாரெலாம் பரவும் பைந்தமிழ்க் கடலிற் படிந்தமு
துண்டநன் மேகம்

சீரெலாம் நிறைந்த வீரவேற் கவிஞன் திகழ்தரு
முருகனின் புகழ்தே

வாரமார் சந்தத் தினிமைசேர் தரவே வழுத்தினன்
மன்பதை யுயவே,

சிவகெங்கை அரசர் உயர்நிலைப்பள்ளித் தமிழ்ப் பண்டிதரும்,
திருவள்ளுவர் கழக ஆசிரியருமான வித்வான்
ச. தட்சணாமூர்த்தி பிள்ளையவர்கள் பாடிய
நேரிசை வெண்பா.

1. திருச்சி ரலையமர்ந்த தெய்வக் குமரனுக்கோர்
பொருட்சீ ரமைந்த புகழ் மாலைதனை—அருட்கவியாம்
வீரவேல் வேய்ந்தான் வியனுலகீர் நும்வினைகள்
தீரவே ஓதும் தினம்.

2. சிந்தனைசெய் வாருளத்தில் சேரும் திருமுருகன்
சிந்தனைப்பா மாலைதனைச் செப்பினல்—சந்ததமும்
பார்வந்து நையாப் பதந்தருவான் பல்புகழ்நும்
நேர்வந்து நிற்கும் நிறை.



உ

வேலு மயிலுந் துணை.

# திருச்செந்தூர் முருகன்

# தெரிசன மாலை

## கணபதி காப்பு

### ஆசிரியப்பா

சீராருஞ் செந்தில் வளம் பதிமுருகன்
செழுங்கமலச் செங்கை வேலான்
தாராருந் தண்கடப்ப மலர்ப் புயத்தான்
சரவணத்தான் தஞ்சம் போற்று
பேராருந் தேவாரப் பண்பாவு
செந்தமிழைப் பேணிப் பாடக்
காராரு மாமுகவன் கழலிணையைத்
துதிபுரிந்து கருத்துள் வைப்பாம்.

## முருகன் துதி

(1.)

கந்தமிகுங் கடம்பணிசேர் கனக மணிக் கழலானைக்
கருதுவோர்க்குப்
பந்தவினை நீக்கியருள் பாலிக்கும் பரங்கருணைப்
பவளக் குன்றை
சுந்தரமா மயிலமர்ந்த சுடர்வடிவேற் பெருமானைச்
சோலை சூழுஞ்
செந்தில்வளம் பதியானைச் செந்தமிழ்மா மலர்சொரிந்து
சேவை செய்வாம்

கந்தனே இன்பம் கந்தனே யன்பர் கருதிடுங் கற்பகச்
செவ்வம்
கந்தனே முந்தை வினையெலாம் விலக்குங் கருணையங்
கடலுமாம் அந்தக்
கந்தனே எந்தை கதிர்வடிவேலன் கலியுகத் தெய்வம்
கந்தனே செந்தில் வளம்பதியமர்ந்து காட்சி தந்தென்னை
யாள்பவனே.

## நூல்

### தேவாரச் சந்தம். பழம் பஞ்சரம்

(மற்றுபற்றெனக் கின்றி)

சண்முகா சிவ சண்முகா சிவ சண்முகா சிவ சண்முகா
சண்முகா சிவ சண்முகா சிவ சண்முகா சிவ சண்முகா

(1)

உலகளந்த முகுந்த னுன்முகன் ஒண்மதி புனல் வேணியன்
நலமிசைந்தவிம் மூவரொன்றெனும் ஞானவாரிதி நீயெனக்
கலைபுகழ்ந்துரை செந்திலம்பதிக் கந்தனே கதிர்வேலனே
தலைவநின்பத சரணமாமலர்த்தஞ்சமாயெனை யாள்வையே

(2)

பத்தி ஞான முணர்ந்து நின் திருப் பாதபங்கயம் போற்றிலாப்
பித்தனென்றெனைக் கைவிடாது பிழைபொருத்தருளையனே
சித்திரமயில் வாகனு திருச் செந்திலம்பதிவாசனே
முத்தனே சிவசண்முகா வடிவேல்விளங்கிடுமூர்த்தியே

(3)

மண்ணிலெத்தனை கோடி கோடியர்மாண்டொழிந்தன
ரென்பதை
எண்ணுதற்கெளிதாகுமோ அடியேனு மவ்வழி யாயினும்
தண்ணருள்வளம் பரவுநேர்மனச் சாந்திதங்குமோர் தந்திரம்
அண்ணலே யளித்தருளுவாய் செந்திலாறுமாமுகத்
தெய்வமே

(4)

பிரணவப்பொருள் சொல்லொணாத பிரமனைச்சிரங்குட்டியே
வரையிடஞ்சிறை யிட்டவித்தக வள்ளலே யடியேனுனைச்
சரணமென்றடைந் தேனருட்டுணை சாரும் நன்னெறி
காட்டுவாய்
வரதபூசித செந்திலம்பதி வாசனே வடிவேலனே

(5)

ஆழியங்கடல் வதனதீர்த்தமும் அமராதியர் தீர்த்தமும்
நாழியங்கிணர் ஞானதீர்த்தமும் நண்ணியுன்னைப்பணிந்தவர்
தாழ்விலாது தனம்படைத்தன்பு சார்ந்துநன்குதழைந்துமே
வாழி வாழிய வரமளித்தருள் செந்திலம்பதி வாசனே

(6)

எங்குமேநிறைந் தென்னுயிர்க்குயிராயும் நின்றருளீசனே
அங்கமா மறைவாசனே யடியார்க்குநந்தருளையனே
திங்கள்வேணியர் செல்வனே திருச்செந்திலம்பதியாளனே
மங்களாகர வாழ்வுதந்தெனை யாள்வை சண்முக வள்ளலே

(7)

சிங்கமா முகன்முருகன் கொடுசூரனுந்திரள் சேனையும்
பங்கமாகிடவே யொழித்துவிண் பண்ணவர்பதி காத்தவா
கொங்குதண்மலர் நீபமஞ்சரி கொண்டகுங்கும மெய்யனே
தங்கமே திருச்செந்திலம்பதிச் சண்முகா யெனையாள்வையே

(8)

அன்னம் ஆடைஅருள்வளந்தரும் ஐயனே முருகையனே
பொன்னடிமலர் போற்றுமென்வினை போக்கிநன்னெறி
புக்கியே
தன்னலங் கருதாதசாதன மாகும் நின்பணி தந்துமே
யென்னையாளுவை செந்திலம்பதி இறைவனே குமரேசனே

(9)

மாதுரஞ்சித வள்ளிகுஞ்சரி மருவுமங்கள வாசனே
யோதுசெந்தமிழ் மாலைசூடி யுனைத்தினந்தொழு தேத்தவே
கோதிலாமணிச் சோதியே யெனை யாண்டுகொண்டருள் கொற்றவா
சீதமார்திருச் சீரலையெனுஞ் செந்திலம்பதிச் செல்வமே

(10)

வேண்டும்அன்பர்கள் வேண்டும்யாவும் வியந்தளிக்கும் விரதமே
பூண்டநின்னடி போற்றும் நாயினேன் பூதலத்துறை வாழ்விலே
நீண்டவன் மனத் தாசைநீங்கிடு நின்னருட்செல்வம்நல்குவாய்
ஆண்டவா செந்தி லாதிபாசிகை யாண்டலைக் கொடியாளனே

(11)

பூமலர்ந்திடு வாசமாமெனப் புவனமெங்கினுமேநிறைந்
தேமலர்ந்தருள் வீசுசெம்பொருள் சீவரட்சக ஞமெனும்
நாமலர்ந்துரை நான்மறைத்திரு ஞானசண்முக நாதனே
கோமலர்ந்தொளிர் செந்திலம்பதி கொங்கு தண்டலை [வாசனே

(12)

பாடுவோம் பணி யாற்றுவோம் பசுஞ்சோதி மாமயில் வாசனை
நாடுவோம்நடு நீதிகொண்டுரை யாடுவோம் நன்கு வாழ்த்தியே,
தேடுவோஞ்சிவ சண்முகன் கழல் சிந்தைகொண்டணி யன்பரைக்
கூடுவோம் திருச் செந்திலம்பதி கோயிலான்புகழ் கூறுவாம்.

(13)

கண்டுவாய்மொழி கானவள்ளி கலந்து கொஞ்சிடு காதலா
செண்டு மாமலர் வாசமஞ்சரி சீரிசைந்தணி தோளனே
கொண்டல் மேவிய செந்திலம்பதிக் கோயில் கொண்டருளையனே
தொண்டனேன் றுதிகொண்டு நின்னருட் சோபை தந்தினிதாள் வையே

(14)

வேத மந்தரசொரூபனே விதி மால் புகழ்ந்துரை மெய்யனே
பாதகிண்கிணி யாளனே பரஞ் சோதி வேலணி பாலனே
பூதலந்துதி செந்திலம் பதிப் புங்கவாசிவ சண்முகா
சீதளந்தரு செங்கடம்பணி தெய்வமே யருள்செய்வையே.

(15)

வஞ்சசூர்படை வாட்டிவானவர் வாழ்வளித்த மயூரவா
தஞ்சமென்றுனை நம்புமென் மனச் சாந்திதந்தருள் சண்முகா
குஞ்சரிமண வாளனே திருச் செந்திலார் குணக் குன்றமே
யஞ்சலென்றடியேனை யாண்டருளையனே முருகையனே.

(16)

கானல்நீரென வேயிசைந்திடு காயமென்பது கண்டுமே
ஞானமாமலர் கொண்டுநின்பதம் நாடியன்பு புரிந்திலேன்
கூனல் வெண்பிறை வேணியார் தரு கோதிலாத வமுதமே
வானவா வெனை யாண்டுகொண்டருள் செந்திலம்பதி வாசனே.

(17)

ஆசையேகுடி கொண்ட நெஞ்சின னன்பிலாதவ னென்றுமே
யேசிடாதெனை யாதரித்தருளெய்துய் நன்னெறி காட்டுவாய்
மாசிலாமணிச் சோதியே திருச் செந்திலம்பதி வள்ளலே
வாசதண்டலை வள்ளியின்ப மணாளமங்கள வாசனே

(18)

மனமெனுங் குரங்கோடியாடி மயங்குமாயவுடம்பிது
கனவெனும்படி வாழ்வு கொண்டு கழிந்த நாள் பலவாகின
நினைவளம்பிடி வள்ளிநாயகி நியனேற்கருள் செய்வையே
கனவளந்தரு செந்திலம்பதிக்கந்தனே கங்கை மைந்தனே

(19)

அன்னை தந்தையராதி ஞாதியரன்பு பாவிய சுற்றமும்
பின்னும் யாவும் நீயன்றி வேறிலே பேதையே னறியாமை
யால்
முன்னையூழ்வினை தந்தவாழ்வு முடியுமுன்முறை யெய்தவே
யென்னையாளுவை செந்திலம்பதி யின்பவாரிதியமுதமே.

(20)

கந்தமும் பரங்குன்றமுங் கழுகாசலந் திருவேரகம்
விந்தமுங் கதிர்காமமும் பல குன்றமும் வெள்ளிவெற்பினும்
எந்த நேரமுமெனது சிந்தையும் யெங்குமாய் விளையாடுங்
கந்தனே வளர்செந்திலம்பதிக்கர்த்தனே மயில் நிர்த்தனே,

## வேறுபண்

### திருநேரிசை.

(21)

முத்து நன் மணிகள் சிந்தி முழங்குதண் கடலின் பாங்கர்
சித்திரமாடகூடந் திகழு மாசிகர மோங்கு
கொத்தலர் சோலை சூழுஞ் செந்திலிற் கோயில் கொண்ட
அத்தனே யடியனேனை யாண்டருளமரர் கோவே.

(22)

இந்திரன் கலிதீர்த்தின்ப மிலங்கிடு மியல்பு தந்த
சுந்தர முருகா நாயேன் றுணைவ நின்னையல்லால்
மந்திரமொன்றுங் காணேன் வரத சண்முக சிங்காரா
சிந்தை நின் சரணங் கோண்டேன் செந்திலம்பதியுளானே

(23)

அன்னையார் வள்ளி பங்கா அறம் பொருளின்பம் வீடு
நன்னயமாக நல்கும் நாத னீயெனவே நாயேன்
பொன்னடி சார்ந்து தஞ்சம்புகுந்துனைப்போற்றி செய்தேன்
என்னையாள் குமரா செந்திலிறைவனே எம்பிரானே.

(24)

ஆரணமுடி மீதாடும் அருட்பரஞ்சுடரே யன்பர்
காரணமாகக் கங்கை தோன்றிய கருணைக் குன்றே
நாரணி புதல்வா நின்னை நம்பினே அருள் தந்தாள்வாய்
சீரலைவாய் விளங்குஞ் செந்திலம்பதியுளானே,

(25)

கானல் நீர்போன்ற வாழ்வைக் கருதி யிவ்வுலகமீது
நானெனதென்னும் நாட்டம் நாடி வீண் காலம் போக்கி
யூனுடல் வளர்க்குமென்னையுண்மை யென்றுணரச்செய்வாய்
தேனலர் சோலை சூழுஞ் செந்திலம்பதியுளானே.

(26)

சாமள வண்ணமாலும் சதுர்முகனமரர் யாரும்
பூமழை பொழியவன்று சரவணம் பொருந்திவந்த
கோமள மணியே யெந்தன் குடிமுழுதாண்டுகொண்டு
சேமமே யருள்வாயையா செந்திலம்பதியுளானே.

(27)

அப்பனே முருகா வுந்தனடிமலர் பரவி யானும்
செப்பமா யுலகில்வாழத் திருவருட்செல்வம் நல்காய்
ஒப்பிலா மணியே யுண்மைப்பொருளை யுன்றந்தையார்க்குச்
செப்பிய நாதா சீரார் செந்திலம்பதியுளானே.

(28)

தந்தைதா யாகி சுற்றஞ் சகலமுமாகி யென்னைக்
கந்தவேளுன்னையன்றிக் காப்பவரினி வேறுண்டோ
சுந்தர வடிவேல் கொண்டு சூர் பகை முடித்த சூரா
செந்தமிழ்மாலை சூடுஞ் செந்திலம்பதியுளானே.

(29)

கடல் மடை திறந்த வெள்ள மெனுங்கவி கனிந்து பாடுங்
கொடையளித்தெனையாட் கொள்வாய் குருமணிக்
குழைபூயாய்வாச
மடலவிழ் குழலார் வள்ளி மருவிடு மாலை மார்பா
திடமிகு கலாபவாசா செந்திலம் பதியுளானே.

(30)

முத்தியு முதலுமாகி முடிவிலாச் சோதியாகி
யெத்திசை யெல்லாமாகி இன்பவாரிதியுமான
வித்தக மணியே நாயேன் விரும்பிடுங் கரும்பே மேவுங்
கொத்தலர் சொரியுஞ் சோலைச் செந்திலம்பதியுளானே.

(31)

விஞ்சைமா மயிலும் வேலும் விண்ணவர் சென்னிசூடுங்
கஞ்சமாமலர் சேர்தாளுங் காட்சி தந்தருள்க வென்றே
தஞ்சமா யடைந்தேனின்னைச் சாமிநீ யருள்தந் தாள்வாய்
குஞ்சரி மருவுங் கந்தா குமரனே செந்தில் வாழ்வே

(32)

அமரர் மங்காது காக்கும் ஆற்றல் கொண் டசுரர் மாயச்
சமரினில் வெற்றிகண்ட சண்முகக்கருணை சார்ந்த
விமலனே யடியேன் செய்தவினையொழித் தருள்வாயையா
குமரிகங்காளி மைந்தா செந்திலம்பதி வாழ்கோனே.

(33)

நானுனை நம்பி நாளும் நானில வாழ்வு கொண்டேன்
தேனினைப் பழிக்குஞ் செவ்வாய் மொழியிசை தெய்வ
வள்ளி
கோனென வளருங் கோவே குறை தவிர்த்தெனை
யாட்கொள்வாய்
கூனலம் பிறையார் செல்வா செந்திலம் பதியாள்கோனே.

(34)

சாமள வடிவஞ் சார்ந்து தண்ணொளி தாங்கு மஞ்ஞைக்
காமரஞ்சிதமே மேவுங் கந்த நின் கழல்கள் போற்றிச்
சேமமா யடியேன் வாழுந் திருவருட் செல்வம் நல்காய்
கோமள விபூதி மேனிக் குருபரா செந்திலானே.

(35)

சங்கர னயன்மால் போற்றுஞ் சாமியே சாமிநாதா
பங்கசமலர்த் தண்பாதம் பரிபுரந்திகழ் விநோதா
துங்கமா முருகா வெந்தன் சொன் மலரணியுந்தூயா
கொங்கு தண்டலையார் செந்தில் வாசனே குமர வேளே.

(36]

பண்டு நான் மறைகள் போற்றும் பரஞ் சுடர் மணியே பாடும்
வண்டுமால் வழங்கு சோலை வள்ளியை மருவும் வாசா
தொண்டனே னுள்ளஞ் சாந்தி துலங்கிடவருள்வாய் சோனைக்
கொண்டல் தண் டலையார் செந்திற் குமர சிங் கார வாழ்வே

(37)

மங்கள முருகா மஞ்சு மரகத மயிலின் வாசா
பங்கச மலரும் பாதம் பரவி நின்பணி செய்தாற்றும்
அங்கமாயடியேன் வாழ்க அண்ணல் நீ யருள்வாயையா
குங்கும சொரூபா செந்திற் குக பரஞ்சுடர் வேலோனே

(38)

இந்திரன் முதலோர் போற்று மிறைவனே இன்ப வள்ளி
சுந்தரி மருவுந் தோளா துணைமலர்ச்சரணம் புக்கும்
எந்தனுக்கருள் தந்தாள்வா யிமையவர்க்கிறைவா செந்தில்
கொந்தலர் கடப்பந்தாரா குங்கும வடிவுளானே.

(39)

அம்பு நேர்விழிசேர் மாத ராடவ ரெவரும் போற்றும்
செம்பொன் மாமணிச் சிலம்பா சிஞ்சித மிலங்கு பாதம்
நம்புமென் பாடல் கொண்டு நன்கு நீருள்வாய் நாதா
கும்பமா முனிவன் வாழ்த்துஞ் செந்தில்வாழ் குமரவேளே.

(40)

மாகதமேனி வள்ளி வானகுஞ்சரியும் வாழ்க
சரவணபவ நீ வாழ்க தஞ்சம் நின் சரணம் வாழ்க
தாரகத மஞ்ஞை வாழ்கச்சுடர்மணி வேலும் வாழ்க
திரமிகு சேவல் வாழ்க செந்திலம்பதியுளானே.

(41)

வேறு

பண்—திருத்தாண்டகம்.

மூவுலகுந் தொழுதேத்து முதல்வன் றன்னை
முக்கணர்க்கு மெய்ப்பொருளை மொழிந்த வேளை
யாவினுமே யளவளவா யமைந்தான் றன்னை
அருமறை தேரருள் வடிவை யன்பு சார்ந்த
பாவனையில் வருவானைப் பரம சாந்தம்
பழுத்ததனிப் பழஞ் சுவையைப் பங்கயஞ்சேர்
சேவடியித் சிலம்பு திகழ் செந்தூரானைச்
சேவை செய்வார் குறையாவுந் தீருந்தானே.

(42)

முக்காலங் கடந்து நின்ற முடிவி லானை
மூவுலகு மீன்றளிக்கு முறைமை கொண்டு
எக்கால மும்பரந்த வெளியிலாடும்
இன்பமய மாயிலங்கு மிறைவன் றன்னை
அக்காலம் அமரரெலாம் அபயம் புக்க
அசுரர் பகை வென்றானை யகண்டமாகித்
திக்காறுங் முகம்பரவு செந்தூரானைச்
சேவை செய்வார் குறையாவுந் தீருந்தானே.

(43)

சரவணப்பூந் தொட்டிலிலே வளர்ந்த சோதி
சண்முகங்க ளுடையானைத் தவத்தோருள்ளம்
பரவுதனிப் பழம்பொருளைப் பவனி மேவும்
பச்சை மயில் வாகனனைப் பண்பு சார்ந்த

அரவணையிற் றுயில்மாயன் மருகோ னாகும்
ஆனந்தத் தேம்பாகை யன்புகொண்டு
சிரம் வணங்கி யென்னாளுஞ் செந்தூரானைச்
சேவை செய்வார் குறையாவுந் தீருந்தானே.

(44)

ஐயாறும் ஆறுக்கும் அந்தமாகி
யம்பரத்தி லாடு திருவருளா யோங்கு
மெய்யானை யருணகிரி மெய் யன்பாற்றி
விதம் விதமாய்ப் பரவு தமிழமுதம் துய்த்த
வொய்யார சுந்தரனை யுலகம் போற்றும்
ஒள்ளிய வேலாயுதனை யுள்ளங் கொண்டே
செய்யாரும் பொழில் வளஞ்சேர் செந்தூரானைச்
சேவை செய்வார் குறை யாவுந் தீரும்தானே.

(45)

பன்னீருஞ் சந்தனமும் பால் வெண்ணீறும்
பரிமளஞ்சே ரபிஷேகப்பணி கொண்டானைப்
பொன்னாருஞ் சரணமலர் சிலம்பு பூணும்
புங்கவனைக் கடம்பணி சேர்பூந்தா ரானை
என்னாளு மிளமை பெறு மெங் கோமானை
இனித்த கனிமொழி வள்ளி யின்ப மெய்துந்
தென்னாருஞ் சீரலைவாய்ச் செந்தூரானைச்
சேவை செய்வார் குறையாவுந் தீருந்தானே.

(46)

மலைமலையாய் வருசூரர் படையை மாய்த்து
வானவர்கள் துயரொழித்த வடிவேலோனைக்
கலைமறைகள் புகழ்ந்தேத்துங் கந்தவேளைக்
கற்பகமா முருகோனைக் கனியை வேண்டி

உலகமெலாம் நொடியளவி லுகந்து சுற்றி
யுளமகிழ்ந்தே பழநிமலை யுறைந்தான் றன்னை
சிலைமகளி னிளங்குமரன் செந்தூரானைச்
சேவை செய்வார் குறையாவுந் தீருந்தானே.

(47)

பூரணமா மதிமேனி பொலிவுற்றோங்கும்
புரந்தர குஞ்சரி மருவு புயங்கொண்டானை
காரணமாய் வந்துதித்த கான வள்ளி
கனி கிழங்கு தேன்படைக்கக் கலந்துண்டானை
நாரணியா ளீன்றசிவ ஞானச் செல்வ
நவமணியைக் குருமணியை நாளும் அன்பர்
சீரகமே யொளிர்வானைச் செந்தூரானை
சேவை செய்வார் குறையாவுந் தீருந்தானே.

(48)

அருவாயு முருவாயு மமைந்த சோதி
யாறுமுகப் பெருமானை யகிலமாகி
மருவாகி மலராகி வாளுமெங்கும்
வளம் பொருந்து முகிலாகி மழையானானை
கருவாகி யுயிராகிக் காட்சி நல்குங்
கதிர்மதியாய்க் கடலாகிக் கலந்து நின்று
திருவாழ்வு தந்தருளுஞ் செந்தூரானைச்
சேவை செய்வார் குறையாவுந் தீருந்தானே.

(49)

நல்லார்க்கு நல்வினையின் வழியாய் நின்று
நன்மை யெலாந் தருவானை ஞானமில்லாப்
பொல்லார்க்கு மவர் மனம் போற் பொருந்துவானை
புகழ்பரவு மறை நான்கும் போலிந்து நின்ற

வல்லானை யெல்லார்க்கும் வாழ்வு தந்த
வானவனைச் சரணமலர் வழுத்தா ருள்ளஞ்
செல்லானை யன்புமயச் செந்தூரானைச்
சேவை செய்வார் குறை யாவுந் தீருந்தானே.

(50)

உள்ளதையே யுள்ளபடி யுரைத்தல் வேண்டும்
உத்தமர்க ளன்புலவு முறவு வேண்டும்
தள்ளரிய சன்மார்க்கந் தரிக்க வேண்டும்
தமிழ்த் தெய்வமான குகன் சரணங்கொண்டு
வள்ளலெனக் கவிமாரி பொழிய வேண்டும்
மனச்சாந்தி யாயுலகில் வாழவேண்டும்
தெள்ளமுதவாரிதியாம் செந்தூரானைச்
சேவை செய்வார் குறையாவுந் தீருந்தானே.



(1)

வேறு

(கல்லார்க்குங் கற்றவர்க்கும்)

பண்

**சொன்மாலை**

உலகமெங்கும் உடலுயிரு முணர்வு மிசைந்துன்னும்
ஓரைந்து பூதாதி யாவினு முட்கலந்தே
மலரில் மணம் போன்றிலங்கி மறை நான்கும் பரவி
வாழ்த்து திருவருட்சோதி மங்கள சிங்கார
நிலைபொருந்து கருணைவளச் சண்முக நின்னடியர்
நெஞ்சகத்தி லுனைவேண்ட நிதியளிக்கும் நிமலா
மலையமுனி தேசிகனே யெனையாளும் வரதா
வளமேவு திருச்செந்தில் வள்ளல் முருகோனே.

(2)

ஞாலமெல்லாம் நின்வடிவாய் நாட்டமிடும் நல்லார்
நாடுகின்ற ஞானவடிவான பரம்பொருளே
காலமெல்லாம் நின்னையன்றிக் கருதிடுமோர் தெய்வம்
கனவினிலுங் கண்டறியேன் கந்தமலர்க்கழலாய்
கோலமயில் வாகனனே குங்கும சொரூபா
குன்றெறிந்த சுடர்வேலா குஞ்சரி சமேதா
வாலை மனோன்மணி புதல்வா வண்டுலவுஞ் சோலை
வளமேவு திருச்செந்தில் வள்ளல் முருகோனே.

(3)

பண்டுலவு வேதாந்தம் பரவுசிவ ஞானம்
பழுத்தொழுகு பழரசமே பரங்கருணை வடிவே
கொண்டுலவு செம்பொருளை கொங்கு மலர்க் கடம்பா
குணநிதியே யருட்கடலே குளிர்விசும் பின்கோலங்
கண்டுமயில் நடனமிடுங் கற்பனை போலடியேன்
கருத்திலுனைக்கண்டு தொழுங் காட்சியளித்தாள்வாய்
வண்டுலவு தண்டலையார் வாவி திகழ் நாடா
வளமேவு திருச்செந்தில் வள்ளல் முருகோனே.

(4)

ஆதாரம் நீ யெனவே அனுதினமும் அடியேன்
அகமலர்ந்து முகமலர்ந்துன்னருளை மிக வியந்து
பாதார விந்தமலர் பரவு தமிழ்கொண்டு
பத்திசெயும் பாமாலை பாடவரந்தருவாய்
வேதாமு ராரிமுதல் விண்ணவரும் விழையும்
விண்ணவனே சண்முகங்கன் விளங்குகின்ற விமலா
மாதாபி ராமி சிவ காமவல்லி பாலா
வளமேவு திருச்செந்தில் வள்ளல் முருகோனே.

(5)

மையாடுங் கண்ணியர்பால் மையல்கொண்டே யடியேன்
மனத்திலுந்தன் மலரடியை மறந்த வடு மாற்றி
ஐயா நின் கருணை நினைந் தன்பு கனிந்துருகும்
அருள் வளஞ்சேர் நல்வாழ்வும் அறிவை யறிந்தறியும்
பொய்யாத பத்திமை நேர் புகலிடமுந்தருவாய்
புண்ணியர் சிந்தாமணியே பூங்கடம்பு புனையும்
வையார வடிவேலா வானவரும் பரவும்
வளமேவு திருச்செந்தில் வள்ளல் முருகோனே.

(6)

கதிரொளியாய்க் கண்மணியாய்க் காட்சியுமா யெங்குங்
கலந்து நின்ற காரணனே காரணகாரியமாய்ச்
சதுர்முகனுந் திருமாலுஞ் சங்கரனும் பலவாய்ச்
சாற்றுகின்ற சமயநெறிக் கடவுளருந் தாமாய்க்
கதியளிக்கும் ரகசியமாய்க் கற்பனைக்கெட்டாத
காருண்யத் திருவுரு நீயென்று கண்டுகொண்டேன்
மதியளித்துன் மலரடியை வாழ்த்து வரந்தருவாய்
வளமேவு செந்திநகர் வள்ளல் முருகோனே.

(7)

பரங்குன்றஞ் சீரலைவாய் பழமுதிருஞ் சோலை
பழநி திருவேரகமும் பலகிரியு மன்பர்
கரங்கொண்டு தொழுதிடவே கன்மவினை தீர்த்துக்
கலியுக மெய்த் தெய்வமெனக் காட்சியளித்தருளும்
சரங்கொண்ட நீபமலர் சந்தன சிங்கார
சண்முக வேலாயுதனே சரண முனையடைந்தேன்
வரங்கொண்டு வையமிசை நான் வாழ்க வருள்வாய்
வளமேவு திருச்செந்தில் வள்ளல் முருகோனே.

(8)

அருவுருவே அருவுருவொன்றில்லாத அருளே
ஆகமங்கள் புகழரிதா யாறுமுகந் திகழுந்
திருவுருவ மாயுலகு சித்தாந்த நெறியே
சேவை புரிந்திட நிலவுந் தீனதயாநிதியே
கருவிலுரு வாகிவந்த காலமுத லடியேன்
கனவினிலும் மறந்தறியேன் கதிர்வடி வேலரசே
மருவுலவி மனங்களித்து வாழுமதியருள்வாய்
வளமேவு திருச்செந்தில் வள்ளல் முருகோனே.

(9)

அலையெழும்பு சாகரம்போ லலையுமனத் தாறும்
ஆசையெனுங் காற்றினிலே யானலைதல் முறையோ
நிலைபொருந்தி யுலகமெலாம் நின்வடிவா மெனவே
நெஞ்சகத்திலன்பொழுகும் நெறியை யெனக்கருள்வாய்
கலையுரைக்குந் திருவுருவே கந்தனெனத் திகழுங்
கண்மணியே சண்முகமாய்க் காட்சி தருங்கதியே
சிலைவளைக்கும் வேடர்குல மங்கை வள்ளி பங்கா
சிவகுமரா திருச்செந்திற் செல்வ முரு கோனே.

(10)

கண்ணாரக் கண்டதுபின் காணமல் மறையுங்
கானல் நிக ராகு மிந்தக் காசினியின் வாழ்வில்
எண்ணாத யெண்ணமெல்லாம் யெண்ணி மனம்யெய்த்தேன்
இறையவனே நின்னையல்லா லின்னுமொரு தெய்வம்
தண்ணாருங் கருணைவளஞ் சார்ந்த நிதி தருமோ
சண்முகக்கரு பாகரனே தஞ்சமளித் தருள்வாய்
மண்ணாதி யைந்தும் நிலை மாறாது காக்கும்
வளமேவு திருச்செந்தில் வள்ளல் முரு கோனே.

(11)

பல்லாயி ரங்கோடி பரவெளியெங் கெங்கும்
பரவிநிற்கு முலகமெல்லாம் படைத்தபரஞ் சோதி
நல்லானே நல்லோர்க ளன்பின்வழி நாடும்
நாயகனே நக்கீரற் காறுமுகங் காட்டி
பொல்லாங்கு போக்கியநின் பொன்னடியே யானும்
போற்றிமகிழ்ந் தேபுவியில் வாழ்கவரந் தருவாய்
வல்லானே வல்லசுரர் புரமெரித்தோன் மகவே
வளமேவு திருச்செந்தில் வள்ளல்முரு கோனே

(12)

ஆரணமுங் காணரிய அன்புமய மலேயே
அன்புமலே மீதுலவி யருள்வீசுஞ் சோதிப்
பூரணசந் த்ரோதயமாய்ப் பொருந்துபரம் பொருளே
புரந்தரதே வாதியரும் புவனமெலாம் போற்றுங்
காரணனே நாயடியேன் கலியகற்றுஞ் செல்வா
கட்டழகு சார்ந்தசெழுங் கற்பகவே லரசே
வாரணமா முகக்கடவுள் சோதரசிங் காரா
வளமேவு திருச்செந்தில் வள்ளல்முரு கோனே

(13)

அரும்பொருளே ஆருயிரே அன்புரசங் கலந்த
ஆனந்தத் தீஞ்சுவைய அமுதமயக் கடலே
விரும்புமெனக் குறுதுணையாய் விளங்கிநல மேவும்
விண்ணவகண் முகமணியே வேதாந்த முடிவே
அரும்புமலர் காய்கனிபோல் அளவவ்வா யன்பர்
அகமலர்ந்த விதமொழுகி அவரவர்க்கும் அணையாய்
வருங்குமர தேசிகனே யெனையாளும் வரதா
வளமேவு திருச்செந்தில் வள்ளல்முரு கோனே

(14)

மனக்குரங்கின் வால்பிடித்து மதிமறந்தே யுலகின்
வாழ்வைநிலை யாமெனவே வல்லமைகள் பேசி
வினைக்கொடுங்கி வீழ்ந்தவர்க ளெத்தனையோ கோடி
வெகுகோடி யாகுமது வேடிக்கை யாமே [யடியேன்
அனைத்தினும்நின் னருள்விளங்கும் ஆற்றல்கண்டே
ஆறுமுகப் பெருமானே யன்புசிகா மணியே
வனக்குறமின் மணவாளா வென்றுசரண் புகுந்தேன்
வளமேவு திருச்செந்தில் வள்ளல்முரு கோனே

(15)

அருள்வடிவே யருண்மலையே யருட்சோதி மணியே
அன்புமலர் வடிக்குமறி வானந்தத் தேனே
இருணிறைந்த கருவரையை யெய்தியெய்தி யெளியேன்
எண்ணரிய பிறவிபிறந் தெய்த்தலினி தாமோ
பொருண்மறையைத் தந்தைசெவி பொருந்தவருள் புரியும்
போதகுரு தேசிகனே புன்மைதவிர்த் தாள்வாய்
மருள்மனத்தோர்க் கெட்டாத மாமதுரக் கனியே
வளமேவு திருச்செந்தில் வள்ளல்முரு கோனே

(16)

பூதங்க ளைந்தாகிப் பொறிபுலன்க ளாகிப்
பொருந்துமுட லுயிரெனவே புவனமெலாங் கொண்டு
நாதமய மாயிலங்கு ஞானபரம் பொருளே
நான்மறைகள் நவிலரிய நன்னிதிய மலையே
ஆதவனே யம்புலியே யம்பரத்தி லாடும்
ஆனந்தத் தாண்டவனே ஆறுமுகத் தரசே
மாதுங்க மலரடியான் வாழ்த்தவரந் தருவாய்
வளமேவு திருச்செந்தில் வள்ளல்முரு கோனே

(17)

கண்டுமொழி மாதர்முகங் கண்டுமனங் கொண்டு
காமசுகங் கருதுமெந்தன் கன்மவினை தீர்த்துன்
தொண்டுபுரிந் தேதிகழுந் தூயமலர்ச் சரணந்
தொழுதுலகில் நலம்பரவு சுபவாழ்வை யருள்வாய்
தெண்டனிடு மெய்யடியர் சிந்தைமலர் வடிக்குஞ்
செழுந்தேனே யருணகிரி செந்தமிழார் வாசா
வண்டொலிசேர் தண்டலையில் மந்திவினை யாடும்
வளமேவு திருச்செந்தில் வள்ளல்முரு கோனே

(18)

தினைமாவுந் தேன்கிழங்குந் தீங்கனியும் பாகுந்
தேவையென வேவிளம்பித் தெய்வவள்ளி காக்கும்
புனமேவி யுண்டுவிளை யாடிமணம் பூண்ட
புங்கவர்சி காமணியே புரந்தரன்மால் போற்றுங்
கனவானே கற்பகப்பூந் தாரணியுங் கந்தா
கமலமலர்ச் சேவடியான் கருதியுனைக் கனிந்தே
மனமார வாயார வாழ்த்துமதி யருள்வாய்
வளமேவு திருச்செந்தில் வள்ளல்முரு கோனே

(19)

பத்திவளம் பழுத்தகனிப் பழஞ்சுவையே யன்பர்
யண்பொழுகு மிதயமலர் பரவுசுயம் பான
வித்தகமாம் பூந்தேனே விண்ணமுதே யடியேன்
விரும்புமனத் திற்கினிக்கும் வேதமொழிக் கரும்பே
சத்தியமா வடிவமெனத் தாரணியோர் போற்றத்
தழைத்துவளர் பேரின்பச் சண்முகங்கள் கொண்டு
சித்திதருந் தெய்வமென வேவிளங்கு சீரார்
திருச்செந்திற் பதியமர்ந்த தேவதயா நிதியே

(20)

மண்ணுலகில் மதிமறந்தே மனக்கோட்டை கட்டி
மாண்டவர்க ளெத்தனையோ கோடியினுங் கோடி
எண்ணரிய பிறவியிலும் மானிடமே மேலாம்
மென்பதனை யானறிந்தும் யேற்றமுறை யுணரேன்
விண்ணவனே மெய்யடியார் வினைதீர்க்குங் குமரா
வேண்டுமெனக் குன்னையன்றி வேறுதெய்வ முளதோ
தண்ணருளா மின்பநிதி சார்ந்தவளந் தருவாய்
சந்தனமா மலைதிகழுஞ் செந்தில்முரு கோனே

(21)

பன்னூரும் நின்புகழே பாடிநலம் பாவும்
பழவடியார் நேசநெறி பற்றியநின் பணியை
யென்னுவும் யென்மனமு மென்னுடலு மொருங்கே
யிசைந்தவளந் தருவாழ்வை யென்றருள்வாய் முருகா
முன்னுளி லேமதுரைச் சங்கத்தார் நடுவில்
முத்தமிழி னதிகாரி யாயமர்ந்த முதல்வா
தென்னூரும் பூஞ்சோலைச் செந்தில்வளர் செல்வா
சிவபரம குருநாதா தெய்வசிகா மணியே

(22)

தமிழகத்தோர் புகழ்பாவுந் தமிழ்ஞானக் கலையே
தமிழ்ச்செல்வப் பொக்கிஷமே தமிழ்மதுரச் சுவையே
அமுதகவிப் பெருங்கடலே யன்புமலர் சொரியும்
ஆனந்தப் பூந்தேனே யாறுமுகந் திகழுங்
குமரனென வந்தடியார் குறைதவிர்க்குங் கோவே
கொங்குலவு பூங்கடம்பா குஞ்சரிச மேதா
அமரர்பதி காவலனே திருச்செந்தி லரசே
அடியேனை யாண்டருள்வா யாதிபரம் பொருளே

(23)

கள்ளமிலா மனத்தகத்தோர் கண்டுதினம் பரவுங்
கதிரொளிமா மேனியனே கனகமணிச் சிலம்பா
தெள்ளமுத வாரிதியே திவ்யபசுந் தேனே
செங்கமலம் பூத்ததிகழ் சேவடியை நாயேன்
உள்ளமிசை மறவாம லொருமையுடன் றுதித்தே
யுன்னருளை யெய்திநல மோங்குநிதி யளிக்கும்
வள்ளலெனச் சேவைசெய்தேன் வளந்தருவாய் முருகா
மஞ்சுலவு தண்டலையார் செந்திலுறை வாழ்வே

(24)

பதிமுருகா திருமுருகா பன்னிருகை முருகா
பரங்கருணை மாமுருகா பரிபுரஞ்சேர் முருகா
கதிர்வடிவே லணிமுருகா கலாபமயில் முருகா
கடப்பமலர் மாலைதிகழ் கண்மணியே முருகா
மதியனைய வெழின்மேனி வாரணருஞ் சரியார்
வனவேட வள்ளிகொஞ்சு மணவாள முருகா
கதிதந்து நாயேனைக் காத்தருள்வாய் முருகா
கந்தமலர்ப் பொழில்மேவுஞ் செந்தில்முரு கோனே

(25)

கோடிநினைந் தேயலைக்குங் குறும்புமனக் கூத்தன்
கொடுங்கோல னாட்சிமுறை கொள்ளாதுன் பணியே
நாடியருள் சார்ந்தநிலை நாடும்வரந் தருவாய்
நாரிசிவ காமியுமை நார்திகழுங் குமரா
ஆடும்மயில் வாகனனே ஆதிபரம் பொருளே
ஆனந்த வாரிதியே ஆறுமுகத் தரசே
மாடமணிக் கோபுரங்கள் வானவெளி வளரும்
வளமேவு திருச்செந்தில் வள்ளல்முரு கோனே

(26)

அருள்கனிந்த கனியேமெய் யன்பருளந் திகழும்
அற்புதச்செஞ் சோதியனே யகிலமெலாம் பரவும்
பொருள்கலந்த பரவெளியே போதமயக் கடலே
போதமயக் கடல்விளைந்த புகழரிய மணியே
இருள்செறிந்த மனத்தினருக் கெட்டாத நிதியே
யென்னுயிரே யென்னுயிருக் குணர்வேயெ ன்னன்புத்
திருவுருவே பேரின்பச் செழுங்கரும்பின் சுவையே
செந்தினகர்க் கரசேயென் சிந்தனை யேற்றருளே

(27)

ஆதாரம் ஆறையுமே ஆறுபடைத் தலமா
யமைந்துநின்றே யருவுருவா யங்குவிளை யாடும்
நீதாம கேசுரனும் நெடுமாலும் விதியும்
நின்னையல்லால் வேறுளதோ நெஞ்சகத்தி லடியேன்
பாதார விந்தமலர் பரவியனு தினமும்
பாரகத்தில் நின்புகழே பாடிடுநற் பணியை
நாதாநீ யருள்புரிந்தே நன்குவளந் தருவாய்
நங்கைவள்ளி ரஞ்சிதனே செந்திநகர் வாழ்வே

(28)

வானவனே வானமுதே வானவர்கோ மானே
வையமிசை வாழுமுயி ரத்தனைக்கு மரசே
கானவனே கானமகள் காதலிக்குங் கனியே
கரியநெடு மாலயனுங் கருதுசிவ மணியே
நானுனது மெய்யடியார் நண்புகொண்டே நாளும்
நன்னெறியாம் வாழ்வருள்வாய் ஞானவடி வேலா
வானவெளி யூடுவளர் மஞ்சுலவுஞ் சோலை
வளமேவு திருச்செந்தில் வள்ளல்முரு கோனே

(29)

மனங்கனிந்தே நின்சரண வனசமலர்ப் பாதம்
வாயார வாழ்த்திமகிழ்ந் தேயுலகி லடியேன்
கனஞ்சிறந்த வாழ்வுபெறுங் கருணைபுரிந் தருள்வாய்
கற்பகமா மலர்மார்பா கதிர்வடிவே லரசே
வனஞ்சிறந்த தினைவளத்தே வான்குருவி யோட்டும்
வடிவழகி வள்ளியரை வங்கணமாய்க் கொண்டு
வதனம்பரவி மருவியசல் லாபசுக வாசா
தண்டலையார் செந்தில்வளர் சரவணச் சண்முகனே

(30)

அருந்தவமா முனிவரரும் அமரர்களும் பரவும்
அன்புமயத் திருவுருவே அந்தரங்கப் பொருளா
யிருந்துலக மாயிசைந்து இன்பவுணர் வாகி
இயங்குகின்ற பெருமானே ஏகநிரா மயனே
திருந்துமனத் தெளிவடைந்து திருவருள்கொண் டுனது
சேவடியான் சேவை செய்யுஞ் செவ்வியவாழ் வுறவே
வரந்தருவா யாறுமுக மங்களமா மணியே
வளமேவு திருச்செந்தில் வள்ளல்முரு கோனே

(31)

இல்வாழ்கை கொண்டுலக மெங்கினுமே இன்பம்
எய்தியுள்ளங் களிப்பதுவே இகபரத்திற் கிசைந்த
நல்வாழ்க்கை யாகுமென நவிலுகின்ற நல்லோர்
நாடுசிவ புண்ணியமே நடுநீதி நிலையே
மல்காக்கும் பன்னிருதோள் மலர்மாலை மழவா
மகிமைபெறும் நின்சரணம் வாழ்த்துமதி யருள்வாய்
வல்காக்குங் கொங்கைவள்ளி மங்கைமண வாளா
வளமேவு திருச்செந்தில் வள்ளல்முரு கோனே

(32)

என்னகமும் என்னுயிரும் என்னறிவும் நீயே
இயற்றிடுமென் தமிழ்மாலை யேற்பவனும் நீயே
முன்னவனு மென்முனின்று முயல்பவனும் நீயே
முகமலர்ந்து குறையாவும் முடிப்பவனும் நீயே
என்னவனும் என்குருவும் எனதுதந்தை தாயும்
இகபரத்திற் குரியவனும் எல்லாமும் நீயே
மன்னவனே யென்றுனையே வாழ்த்திமன மகிழ்ந்தேன்
வளமேவு திருச்செந்தில் வள்ளல்முரு கோனே.

## வேறு

### வருகைப் பருவம்.

(33)

முருகன் வருக பரங்கிரிமா முதல்வன்வருக முராரிமகிழ்
மருகன் வருக செந்திநகர் வரதன்வருக வளஞ்சோதி
யுருவன் வருக பழனிமலைக் கொருவன்வருக வுயர்முனிவன்
குருவன் வருக யெனையாளுங் குமரன்வருக வருகவே

(34)

கந்தன் வருக சாமிமலைக் கடம்பன்வருக கண்ணுதலான்
மைந்தன் வருக சோலைமலை வாசன்வருக மலைகடொறுஞ்
சொந்தங் கொண்டு விளையாடுந் துய்யன் வருகதொழுதிடுமென்
சிந்தை யுலவுஞ் சுடர்வடிவேற் செல்வன்வருக வருகவே

(35)

குன்றைக்குடியுந் தோகைமலை குமரன்மலையுங் கொடுமளுடை
மன்றம்பொதிகா சலமிலஞ்சி வள்ளிமலைவா சன்வருக
என்றைப்பொழுதும் யெனைக்காக்கும் இறைவன்வருக எழில்பரவுங்
குன்றக்குறத்தி மணவாளன் கோமான்வருக வருகவே

(36)

வேதம்பரவும் வெள்ளிமலை விமலன்வருக வெண்ணெய்மலை
நாதன்வருக மாதணிகை நம்பன்வருக நளினமலர்ப்
பாதன்வருக சென்னிமலைப் பரமன்வருகப் பைந்தமிழார்
போதமுநிவன் கொண்டாடும் புலவன்வருக வருகவே

(37)

கதிர்காமங்கந் தாசலமுங் கழுகுமலையுங் கடம்பூரும்
பதியாயுறையும் பரன்வருக பைம்பொற்பணிசேர் பதசரணந்
துதியாகின்ற மெய்யடியார் துணைவன்வருக சுரர்புகழும்
மதிவாணுதல்குஞ் சரிகணவன் வரதன்வருக வருகவே

(38)

வேலன் வருக விராலிமலை வேந்தன்வருக விமலவல்லி
பாலன் வருக பரங்கருணைப் பரமன்வருகப் பரிபுரஞ்சேர்
சீலன் வருக யெனையாளும் செல்வன்வருக செந்தூரக்
கோலன் வருக மயிலேறுங் குழகன்வருக வருகவே

(39)

குமரன்வருக புனக்குறமான் கொஞ்சும்இன்பக் குகன்வருக
சமரம்புரிந்து தானவரைச் சங்கரித்தே தஞ்சமுறும்
அமரர்பயந்தீர்த் தருள்புரிந்த ஐயன்வருக ஆறுமுக
விமலன்வருக யெனையாளும் வேலன்வருக வருகவே

(40)

ஞானபரணன் வருகவுமை நாராயணிபா லகன்வருக
வானோர்சேன பதிவருக வள்ளல்வரதன் வருகவடி
யேனன்பரவுஞ் சுடர்வடிவே லிறைவன்வருக வுலகமெலாந்
தானாகியதற் பரன்வருக சாமிநாதன் வருகவே

(41)

பண்ணார்மொழிபைங் குறவள்ளி பழமுந்தேனும் பரிந்தளித்த
தண்ணார் முகச் சுவையுண்ட தலைவன்வருக தமிழகத்தின்
கண்ணேவருக சிவஞானக் கனியேவருக கடம்பணியுந்
திண்ணார்புயசண் முகவருக செவ்வேள்வருக வருகவே

(42)

ஐயாசரணம் ஆறுமுகத் தரசேசரணம் அருள்மயமார்
மெய்யாசரணம் வெற்றிமயில் வீராசரணம் வேலேந்துங்
கையாசரணம் யெனையாளுங் கந்தாசரணம் கதிரொளிசேர்
செய்யாசரண பங்கயமா சிலம்பாசரணம் சரணமே

(43)

அருளேசரணம் அருள்கலந்த அறிவேசரணம் அன்புமய
வுருவேசரணம் உலகமெலாம் ஒளிர்வோய் சரணம்ஓங்கு லர்
மருவேசரணம் யென்னகத்துள் வருவோய்சரணம் மாதுமையாள்
திருவேசரணம் திகழ்சதங்கைச் சிலம்பாசரணம் சரணமே

(44)

திருவேதெய்வச் செழுங்கனியே சிறியேன்பாவுந் தீந்தமிழ்தேர்
குருவேயன்பு வளர்ந்திகழுங் குணமெய்ஞ்ஞானக் கொடையளிப்பாய்
முருகாகுமரா வுலகளந்த முகுந்தன்மழைமா முகில்வண்ணன்
மருகாமருவார் கடம்பணியும் வரதாசரணம் மலர்ப்பதமே

## வேறு சந்தம்

(45)

உலகமெலா மோருருவா யுகந்துநின்ற தெய்வம்
உள்ளமலர் சொரியுமன்பர்க் குண்மையுள்ள தெய்வம்
கலைபரவிப் புகழ்ந்தேத்துங் கருணைமயத் தெய்வம்
கற்பகாமா மலர்கமழுங் கடம்பணியுந் தெய்வம்
நலமிலங்கு நடனமயில் வாகனமா தெய்வம்
ஞானவடி வேலேந்து நங்குமர தெய்வம்
சிலைநுதல்குஞ் சரிவள்ளி சிங்காரத் தெய்வம்
திருச்செந்தி லாதிபதி தெய்வமதே தெய்வம்

(46)

பண்ணாரும் பைந்தமிழார் பாமாலைத் தெய்வம்
பன்னிரண்டு கண்ணிலங்கு பரஞ்சோதித் தெய்வம்
விண்ணோடும் மண்ணோடும் விளங்குகின்ற தெய்வம்
வெற்றிவடி வேலுடைய மெய்யான தெய்வம்
தண்ணாருஞ் சரவணத்தில் விளையாடுந் தெய்வம்
சச்சிதா னந்தமய மாய்வளருந் தெய்வம்
திண்ணாரும் நவவீரர் சேவைசெயுந் தெய்வம்
திருச்செந்தி லாதிபதி தெய்வமதே தெய்வம்

(47)

மந்திரமாய்த் தந்திரமாய் மதியளிக்கும் தெய்வம்
மாசில்லா மலரகத்தே மலர்ந்தருளுந் தெய்வம்
இந்திரா தியர்முதலோர் இறைஞ்சுகின்ற தெய்வம்
எந்தனுளம் நாடுகின்ற இன்பமயத் தெய்வம்

சந்தனமா மலையமர்ந்த தனிச்சோதித் தெய்வம்
சகலகலா வல்லவனுஞ் சாமிமகா தெய்வம்
சிந்தனையில் மெய்யடியார் சேவைசெயுந் தெய்வம்
திருச்செந்தி லாதிபதி தெய்வமதே தெய்வம்

(48)

வேதங்கள் முடிகின்ற விளையாடு தெய்வம்
மெஞ்ஞான பண்டித னெனும்பெரிய தெய்வம்
ஓதிடுமென் செந்தமிழுக் குதவியருள் தெய்வம்
ஓங்கார மயமாங் யொளிபரவு தெய்வம்
வாதமிடு சமயநெறி வணங்குபர தெய்வம்
வாசாம கோசரம னாதீத தெய்வம்
சீதமலர் மாலையணி சிங்காரத் தெய்வம்
திருச்செந்தி லாதிபதி தெய்வமதே தெய்வம்

(49)

வானாடர் வாழ்த்துஞ்சே னாதிபதியாம் தெய்வம்
மங்கைகுஞ் சரிவள்ளி மணவாள தெய்வம்
ஊனாடு முயிர்களுக்கு முயிரான தெய்வம்
உண்மைநெறி நின்றவர்க்கு முபகார தெய்வம்
ஆனாத மாகருணை முகிலான தெய்வம்
அடியார்கள் துதிபரவு மற்புதமாந் தெய்வம்
தேனாடு குன்றங்கள் விளையாடுந் தெய்வம்
திருச்செந்தி லாதிபதி தெய்வமதே தெய்வம்

(50)

குன்றமெங்கும் விளையாடுங் கோயில்கொண்ட தெய்வம்
குங்குமவண் ணந்திகழுங் கோலமணித் தெய்வம்
அன்றமரர் சிறையொழித்த ஆறுமுகத் தெய்வம்
அன்புமய மாயுலகி லருள்புரியுந் தெய்வம்
வென்றிமயில் வாகனத்தில் விளையாடும் தெய்வம்
மேதினியோர் கொண்டாடி மெச்சுகின்ற தெய்வம்
தென்றல்வளர் தண்டலையார் சீரலைவாய்த் தெய்வம்
திருச்செந்தி லாதிபதி தெய்வமதே தெய்வம்

(51)

சந்தனமா மலையமர்ந்த சகலகலா தெய்வம்
சாற்றுமெந்தன் தண்டமிழை யேற்றருளுந் தெய்வம்
கொந்தலர்பூங் காவெபாதிகைக் குறுமுனிவன் தெய்வம்
குஞ்சரனூர் நேரிலாய குணநிதியாம் தெய்வம்
சந்தமலர்க் கழலணிசேர் கதிர்மேனித் தெய்வம்
கண்ணுதலா னன்புலவுங் கண்மணியாம் தெய்வம்
செந்துவர்வா யின்பவள்ளி மணவாளத் தெய்வம்
திருச்செந்தி லதிபதி தெய்வமதே தெய்வம்.

(51)

காதல் சஞ்சிதவள்ளி கட்டழகுத் தெய்வம்
கருணையங் கடலா யமைந்துவளர் தெய்வம்
ஆதலா லென்மனத் தகலாத தெய்வம்
ஆறுமுக மாயொளிரு மன்பொழுகு தெய்வம்
போதமா யெங்கினு மிலங்கியருள் தெய்வம்
பொன்சிலம் பணிபரவு பூம்பாத தெய்வம்
சீதவா ரிதியருகு தெரிசனத் தெய்வம்
திருச்செந்தி லாதிபதி தெய்வமதே தெய்வம்

(52)

அன்புமய மாகியெனை யாட்கொண்ட தெய்வம்
ஆனந்த மானபர மாயமைந்த தெய்வம்
இன்பநிலை யாய்நின்ற இல்லறத் தெய்வம்
ஏகாந்த மானமய மாயிலங்கு தெய்வம்
நன்மதுர மொழிவள்ளி நாயகத் தெய்வம்
நஞ்சமுத முண்டசிவனார் பரவு தெய்வம்
சென்மவினை நீக்கியருள் சித்தாந்தத் தெய்வம்
திருச்செந்தி லாதிபதி தெய்வமதே தெய்வம்

(53)

வாசக் கடப்பமலர் மாலையணி தெய்வம்
வரைராசன் மகள்தந்த மணியான தெய்வம்
மாசற்ற சோதிவடி வேலுடைய தெய்வம்
மரகதப் புரவிமயில் வாகனத் தெய்வம்
பூசிக்கு மன்பர்வினை தீர்க்கின்ற தெய்வம்
பூதலந் துதிபரவு சண்முகத் தெய்வம்
தேசுலவு மருணகிரி செந்தமிழ்த் தெய்வம்
திருச்செந்தி லாதிபதி தெய்வமதே தெய்வம்

—x—

வேலு மயிலுந் துணை,

**திருச்செந்தூர் முருகன்.**

# கும்மி.

1. செந்திலாதிபதி தேவதயாநிதி
தேம்பொழில் சூழ்திருச் சீரலைவாய்ச்
சந்தன மாமலைச் சண்முகனார் பதஞ்
சார்ந்து கும்மி யடியுங்கடி
2. சிங்கார மாமயில் வாகனன்டி அவன்
சேவற் கொடிகொண்ட சேவகண்டி
அங்காரச்சுடர் மேனிதிகழ்ந்திடும்
அண்ணலைப் பாடி மகிழுங்கடி
3. வெற்றி தருந்தனி வேலுடையான் அவன்
மேதினி எங்கும் புகழுடையான்
பெற்றிதருந் தமிழ் மாலை மனோகரன்
பேரின்ப மான சொரூபனடி

4. வானவர் பூசித மாமகள் குஞ்சரி
வாழ்த்து மணவாள னுகுமடி
யானை முகனுக் கிளையவண்டி சிவ
ஞான துரந்தர வாகனடி

5 கானகஞ் சென்று தினைப்புன வள்ளியை
கண்டு மகிழ்ந்து கனிமாவுந்
தேனுங் கலந்து படைத்திடவே யுண்டு
சேகர மாகிக் கலந்தவண்டி

6. வாசக் கடம்பணி வள்ளவடி யவன்
வாழ்த்திடு மன்பரைக் காப்பவண்டி
ஓசைச் சிலம்பணி பாதமலர் திகழ்
உல்லாச னுன் விநோதனடி

7. எங்கும் நிறைந்த பரம்பொருளா மவன்
இன்ப மயமா யிசைந்தவண்டி
பொங்குங் கடல்தருஞ் சீரலை வாய்வளர்
பூரண னை புராதனண்டி

8. ஆரணம் போற்றும் அழகனடி அன்று
ஆயிரத் தெட்டண்டம் ஆட்சிசெய்த
சூரனைக் கொன்று சுரர்களை ரட்சித்த
துய்யனைப் பாடி மகிழுங்கடி

9. செக்கச் சிவந்த செழுஞ்சுடர் மேனியன்
தெய்வ சிகாமணி தேங்கடம்பன்
இக்கணம் வந்து நமக்கருள் செய்யவென்
றிசைந்து கும்மி யடியுங்கடி

10. ஆயிர மாயிரங் காவடிகள் கொண்டு
ஆத்தூர் சிந்தி லலங்கரித்தே
தாயினு மிக்க தயாபர சண்முகன்
தஞ்ச மலர்க்கழல் நெஞ்சிருத்திப்

11. பூசை புரிந்து வணங்கிடு மன்பர்கள்
போற்றிப் புளகிதங் கொண்டெழுந்து
நேச மிகுந்தருள் சிந்தை நிரம்பி
நெகிழ்ந்து பரவச மாகியவர்

12. வேலுமயிலுந் திருச் செந்தி லாதிப
வென்று முழங்குந் துதிகள்பல
காலு மிசைந்து மகிழ்ந்து நடந்திடுங்
காவடிக் காட்சி யனந்தமடி

13. அன்பர் துதிக்க வருவாண்டி யருள்
வாரிதி ஆறுமுகத் தாண்டி
இன்ப மயமான வள்ளி மனோகரன்
எண்ணிய வெல்லாந் தருவாண்டி

14. சின்னஞ் சிறு பிள்ளை சிங்காரப்பிள்ளை
திருச்செந்தூர் வாழ்சிவ ஞானப்பிள்ளை
தன்னந் தனிப்பர மானந்தப் பிள்ளையைச்
சார்ந்து கும்மி யடியுங்கடி

15. ஆழிக்கடலுங் குற மங்கை வள்ளியி
னற்புத மான திருக்குகையும்
நாழிக் கிணறும் பலப்பல தீர்த்தமும்
நாடிக் கும்மி யடியுங்கடி

16. ஆலய மெங்குஞ் சகசோதி நிறைந்
தற்புத மான வலங்காரம்
பாலாபி ஷேகன் சிவசுப்ர மண்யனைப்
பாடிக் கும்மி யடியுங்கடி

17. அரிய சேவையும் அன்பும் பொருந்திய
ஆண்டவன் பூசனை யர்ச்சகராம்
திரிசுந்திரர் தீப தரிசனம்
தெய்வ நிலையை விளக்கிடுமே

18 பாமாலைக் காரன் பசுங்கிள்ளை வள்ளி
பரவுந் திவாகரன் பன்னிருதோள்
பூமாலைக்காரன் திருச்செந்தூர் வேலனைப்
புகழ்ந்து கும்மி யடியுங்கடி

19. குஞ்சரி கொஞ்சிடும் ரஞ்சிதனும் பசுங்
கோலக் குறமங்கை பாகனடி
தஞ்சமலர்ப் பதம் சிந்தை நினைந்திடத்
தாரணி வாழ்வு தழைத்திடுமே

20. அருண கிரித்தமிழ் மாலை யணிந்திடும்
ஐயன் திருச் செந்தி லாதிபதி
கருணை சொரிந்து மனக்குறைத் தீர்த்திடுங்
கந்தனைப் போற்றி மகிழ்வோமடி

21. வேதம் புகழ்ந்திடும் வெற்றிவே லாயுதன்
வித்தக சண்முகன் மென்மலரார்
பாதம் பணிந்து மகிழ்ந்து தினந்துதி
பாடிக் கும்மி யடியுங்கடி

22. வள்ளி மலைச்சாரல் வேடுவ வள்ளியை
வங்கணங் கொண்டு கவர்ந்தவண்டி
புள்ளி மயிலேறும் சண்முகன் பாதத்தைப்
போற்றிக் கும்மி யடியுங்கடி

23. கற்பக நாட்டுக்குக் காவலண்டி கதிர்
வேலணி கந்தக் கடம்பனடி
விற்பன மேவும் பொதிகை முனிக்கருள்
வித்தை ப்ரசங்க விநோதனடி

24. செந்தமிழ் நாட்டுக்குத் தெய்வமடி திருச்
செந்தில் வளம்பதி நாதனடி
மந்திரம் ஆறெழுத் தாகிய வள்ளலை
வணங்கிக் கும்மி யடியுங்கடி

25. மங்களம்பாடி முருகன் மலர்ப் பதம்
வாழ்த்துங் கும்மி வழங்கிடவே
சங்கரன் குமரன் தஞ்சம் நமக்குண்டு
தாரணி யெங்குந் தழைந்திடவே.

**திருச்செந்தூர் கும்மி, சம்பூரணம்**

**ஓம் சரவண பவன் துணை.**

